SRI M. C. MUTHUKUMARASWAMY: அபிவிருத்தி வட்டாரங்களில் மாத்திரம் முதியோர் கல்விக்கு உதவி அளிக்கப்படுவதாகச் சொன்னார்கள். அபிவிருத்தி வட்டாரங்களில் சேராத பிரதேசங்களில் முதியோர் கல்வியை அமுலுக்குக் கொண்டுவராததற்கு அரசாங்கம் ஏதாவது நடவடிக்கை எடுக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: மற்ற இடங்களில் இது இப்பொழுது தனிப்பட்டவர்களின் முயற்சிக்கு விடப்பட்டிருக்கிறது. எல்லாப் பகுதிகளும் இந்த அபிவிருத்தித் திட்டங்களின் கீழ் வர இருப்பதால், அந்த சமயத்தில் முதியோர் கல்வித் திட்டம் எல்லா இடங்களிலும் அமுலுக்கு வரும்.

SRI K. ANBAZHAGAN: முதியோர் கல்வி பள்ளிக்கூடங்களில் சுமார் 260 மூடப்பட்டன என்ற கருத்தை அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள். அப்படி மூடப்படுவதற்கு காரணம் என்ன? அந்த இடங்களில் எல்லா முதியோர்களும் கல்வி கற்றுவிட்டார்களா? அந்த இடங்களில் அவசியம் இல்லையா?

THE HON. SRI C. SUBRAMANIAM: இல்லை. 1954-ம் ஆண்டில் இந்த முதியோர் கல்வி திட்டத்தின் அடிப்படை மாற்றப்பட்டது. இதற்கு முன்பு 11 வயதிலிருந்து 45 வயது வரை இருக்கக்கூடிய எல்லோருக்கும் முதியோர் கல்வி அளிக்கப்பட வேண்டுமென்ற அடிப்படையில் இந்த பள்ளிக்கூடங்கள் நடத்தப்பட்டன. அதற்கு பதிலாக, அதை மாற்றி ஆரம்ப காலத்திலே படிப்பு இல்லாமல் இருக்கக்கூடியவர்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து, அவர்களை படிக்க வைத்து விட்டால் பிறகு வயது வந்தவர்களில் படிக்காதவர்கள் இருக்கமுடியாது என்று கருதி, 8 அல்லது 9 வயதிலிருந்து 18 வயது வரையில் உள்ளவர்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து அவர்களுக்கு கல்வியை போதிக்கவேண்டுமென்ற முறையில் தேசீய விஸ்தரிப்புத் திட்டம், சமுதாய நல அபிவிருத்தி திட்டம் அமுலிலிருக்கும் பிரதேசங்களில் அதிகாரிகள் அதிகமாக இருக்கக்கூடிய காரணத்தினாலே அந்தப் பிரதேசங்களில் இந்த முதியோர் கல்வி திட்டம் பரப்பப்படுகிறது. இதனால் 260 பள்ளிக்கூடங்கள் மூடப்பட்டன.

SRI K. VINAYAKAM: Whereas it is considered that the amount spent on adult education is a criminal waste as the amount is spent on a dying generation, will the Government consider scrapping the whole of this scheme and concentrate more upon universal primary education which will solve our illiteracy problem sooner?

THE HON. SRI C. SUBRAMANIAM: I do not know whether it could be called a criminal waste. But we thought it was a waste and we are now concentrating on the age group of 9 to 18.

MR. SPEAKER: It is not advisable to use such strong language as 'criminal waste' and 'dying generation'.

SRI K. VINAYAKAM: I think it is not . . .

MR. SPEAKER: I only said that it was not advisable. The hon. Member may think it is right.

*Community Development Scheme*

* 165 *Q.*—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether he had received representations during his tour of Erode taluk during May 1958 that the Community Development Scheme should be extended to the whole of Erode taluk; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) & (*b*) No, Sir.

17th September 1958]

SRI N. K. PALANISAMI : இந்தப் பிரதேசம் மிகவும் பஞ்சப் பிரதேசமாக இருப்பதினால் அடுத்த வருஷத்தில் சமுதாய நல அபிவிருத்தி திட்டத்தை இந்தப் பிரதேசத்திற்கு விஸ்தரிப்பதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்யுமா ?

MR. SPEAKER : The main question of the hon. Member was whether the Hon. Minister had received any representation. Now the hon. Member is asking about something else. Next question.

*Financial year*

* 167 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Finance be pleased to state whether the Government have received any communication from the Central Government asking for the opinion of this Government about changing the financial year to begin from October 1st instead of the present April 1st?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir. The Government of India have recently re-examined the question and decided to continue the present arrangements.

SRI A. V. P. ASAITHAMBI : புதியதாக வகுக்கப்பட்ட சாகா ஆண்டு அமுலுக்கு வந்துவிட்டதா ? சாகா ஆண்டு வகுக்கப்படும்பொழுது ராஜ்ய சர்க்கார் உரிய முறையில் கலந்தாலோசிக்கப்பட்டதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அது காலெண்டரைப் பொறுத்தது. இது நிதி ஆண்டைப் பொறுத்தது.

SRI M. JAGANNATHAN : What were the reasons originally assigned by the Government of India to change the financial year?

THE HON. SRI C. SUBRAMANIAM : The Government of India never wanted to change the financial year. But proposals were made by the Bengal Government and a few other organizations that it should be changed. After full consideration the Government of India have come to the conclusion that it is not necessary to change it.

*Fort St. George*

* 205 *Q.*—SRI N. R. THIAGARAJAN : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to shift the military stationed at the Fort St. George to the Government Estate, Mount Road, and to provide accommodation to Members of Legislature in the Fort St. George itself?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

SRI N. R. THIAGARAJAN : மெம்பர்களுக்கு இங்கே இடம் கொடுக்க வேண்டியதற்காகவும், சர்க்கார் காரியாலயங்களை இங்கே வைப்பதற்கும், முதலில் மிலிட்டரியை இங்கிருந்து வேறு இடத்திற்கு மாற்றச் செய்ய சர்க்கார் ஏற்பாடு செய்வார்களா?